செண்ணிகைக் கோதை கதுப்போ டியல
மணிமரு டேன்மகிழ் தட்ப வொல்கிப்
பிணிநெகிழப் பைந்துகி னோக்கஞ் சிவப்பூரப்
பூங்கொடி போல நுடங்குவா ளாங்குத்தன்
சீர்தகு கேள்வ னுருட்டுந் துடிச்சீராற்
கோடணிந்த முத்தார மொல்க வொசிபவளோர்
ஆடை யசைய வணியசையத் தானசையும்
வாடை யுளர்கொம்பர் போன்ம்.
வாளி புரள்பவை போலுந் துடிச்சீர்க்குத்
தோளூழ் பெயர்பவள் கண்.
மாறம ரட்டவை மறவேல் பெயர்ப்பவை
ஆறிரு தோளவை யறுமுகம் விரித்தவை
நன்றம ராயமோ டொருங்குநின் னடியுறை
இன்றுபோ லியைக வெனப் பரவுதும்
ஒன்றார்த் தேய்த்த செல்வநிற் றொழுதே.

இசையமைத்தவர்: **கண்ணகனார்.**
பண்: **காந்தாரம்.**

## புறநானூறு
## நக்கீரனார்
பாடல் எண்: 56

மணிமயில் உயரிய மாறா வென்றி
பிணிமுக ஊர்தி ஒண் செய்யோனும் என
ஞாலம் காக்கும் கால முன்பின்
தோலா நல்இசை.... உள்ளும்

## சிலப்பதிகாரம்
## இளங்கோவடிகள்
பாடல் 5 - 170

அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
கோழிச் சேவற் கொடி யோன் கோட்டமும்

## இன்னாநாற்பது
## கபில தேவர்
கடவுள் வாழ்த்து

ஆங்கின்னா
சத்தியான் தாள்தொழா தார்க்கு

## ஐந்திணை ஐம்பது
## மாறன் பொறையனார்
முல்லை - 1

செல்வக் கடம்பு அமர்ந்தான் வேல் மின்னி

**சங்கப் பாடல்களில் முருகன் முற்றிற்று**